# தமிழிசை முழக்கம்

யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார்




அன்பு நிலயம

இராமச்சந்திரபுரம் :: திருச்சி ஜில்லா

## பதிப்புரை

"தமிழிசை முழக்கம்" என்னும் இவ்வரிய நூலைத் தமிழ்த்தாயின் மலரடியில் வைத்து வணங்குகிறோம். தமிழ் எம்மொழிக்கும் தாழ்ந்ததன்று. இன்று புதுமைபெற்று விளங்கும் எந்த மொழியினும், தமிழ் பழஞ்சிறப்பும், புதுப்பொலிவும் உடையது. உலகில் உள்ள மொழிகளில் மிக்க இசை நயம் வாய்ந்த அருட்பாடல்கள் நிரம்பியது நமது தமிழ் மொழியே! தமிழுக்கும், தமிழிசைக்கும் நல்ல காலம் பிறந்தது. ஏராளமான தமிழ்ப்பாடல்கள் பூத்து நறு மணங் கமழ்கின்றன. யோகி ஸ்ரீ சுத்தா னந்த பாரதியார் அரிய தமிழிசைப் பாடல் களை அருளி, நாடெங்கும் தமிழ்முழக்கம் செய்திருக்கிறார்; இந்நூலில் தமிழிசையின் வரலாற்றையும், பிறநாட்டார் தத்தம் இசைக்கலையை வளர்க்கும் நேர்மையை யும், தமிழர் தம் மொழியையும் இசையை யும் வளர்க்கும் வகையையும், பல ஆதாரங் களைக்கொண்டு ஆராய்ந்தளிக்கிறார். தமி ழிசை மறுமலர்ச்சிக்கு இந்நூல் எழுச்சி தரும். தமிழிசை வளர்த்த வள்ளல், செட்டிநாட்டரசர் ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்கட்கு இந்நூலை அர்ப் பணஞ் செய்கிறோம். இந்நூலுடன் ஆசிரிய ரின் தமிழ்க் கீர்த்தனங்களையும் பாடுக.

இராமச்சந்திரபுரம்
10—6—1944 } அன்பு நிலயத்தார்.
எஅ-க-த



உ

# தமிழிசை முழக்கம்

வெற்றி முழக்குங்கள், விரத் தலைநிமிர்ந்து,
பெற்றதா யின்புகழைப் பேசுங்கள்—வற்று
மலையருவி போலூறி வந்ததுபே ரின்பக்
கலையருவி யென்றே களித்து.

## க. தமிழுக்கு நற்காலம்!

ஒரு பெரிய புயலடித்து ஓய்ந்தது; தமிழ்வானம் தெளிவடைந்தது. எங்கும் இசைக்கதிர் பரவுகிறது. தமிழ்த்தென்றல் அன்பு மலர்களைக் கொஞ்சி வருகிறது. தமிழர் உள்ளமெல்லாம் 'தமிழ், தமிழ்' என்று துடிக்கிறது. இசையரங்குகளில் தமிழ்க்கலை நடனமாடுகிறது. கணக்கற்ற செந்தமிழ்க் குயில்களும், மயில்களும், கிளிகளும் தமிழ்ப் பொழிலை இன்புறுத்துகின்றன. தமிழுக்கு நல்ல காலம்; தமிழருக்கு நல்ல வெற்றி! தட்டுத் தடைகளை எற்றியெறிந்து, நமது வெற்றித் தேர் முன்செல்கிறது. தமிழுணர்ச்சி வீறிடுகிறது: தமிழ் உள்ளம் தமிழை வளர்க்கக் கிளர்ச்சி கொண்டது; இனித் தளர்ச்சியில்லை; மேன்மேலும் வளர்ச்சிதான்!

## உ. தமிழ் வென்றது !

தமிழிசை வெள்ளத்தை இனித் தடுப்பவர் யார்? தமிழில் பாடவராது என்று தப்பமுயல்வோர் யார் ? தமிழில் இசைச்செல்வம் இல்லையென்னும் பித்தர் யார் ? யாருமில்லை என்றே துணிந்து சொல்வோம். கட்சிகள் எழுந்தன. சொற்போர்கள் அச்சிலும் மேடையிலும் கூரம்பு வீசி வீறிட்டன. எதிர்ப்புகள் முட்டுக்கட்டை போட்டன. உண்மையை யார் எதிர்க்க முடியும்? குயிலிசையைக் காகம் தடுக்க முடியுமா? கிளிமொழியைக் கழுகு தடுக்க முடியுமா? அதததன் குரல் அததற்குரியது. தமிழருக்குத் தமிழிசை ! தமிழிசை வென்றது. தமிழ் வென்றது ! வாழ்க தமிழ் ! தமிழ் உலகின் மிகப் பழையமொழி. எத்தனையோ தொல்பெருமொழிகள் வழக்கொழிந்தன. நமது தமிழ் இன்றும் பழம் பெருமையுடன், இளம் பொலிவுடன் முன்னேறிக் கொண்டிருக்கிறது. இந்த நாட்டில் தமிழுக்குரிய உரிமையை இனி நாம் பெற்றே தீருவோம்; எமது தாயை அரியணையேற்றிக் காண்போம். ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே திண்மை பெற்று நிலவும் உலகமொழி தமிழே !

## ங. இசைச் செல்வம்

அக்காலத்திலேயே நமது தாய்மொழி நல்லிசைச் செல்வம் பெற்றிருந்தது; ஏராளமான இசை நுணுக்க நூல்களையும் கூத்தநூல்களையும், பெற்றிருந்தது. அண்மையில், மோகஞ்சதாரோ, ஹரப்பாவிற் கிடைத்துள்ள புதைபொருள்களில், தமிழ் எழுத்துக்

கள் காண்கின்றன; தமிழர் வழங்கிய யாழுருக் காண்கிறது; தமிழர் நாகரிகக்குறிப்புகள் ஏராள மாகக் காண்கின்றன. தற்கால வரலாற்றின் போக்கையே இச்செய்தி மாற்றிவிட்டது. இப்போது வடநாட்டார்கூட நமது பழம்பெரு நாகரிகத்தை ஒப்புகின்றனர்.

நாகரிகம் படைத்த எந்த நாடும் தனக்கென இசைச்செல்வத்தை அமைத்துக்கொள்வது வழக்கம். பல நூற்றாண்டுகட்குமுன் எழுதப்பெற்ற சிலப்பதி காரத்திலும், சிந்தாமணியிலும், கம்பராமாயணத் திலும், நம் இசைச்செல்வம் வளமைபெற்று விளங்கு கிறது. தமிழர் இயற்கையோடிணைந்து வாழ்ந்த னர். சங்கநூல்களிலெல்லாம் இயற்கை வாழ்வு இயல்பான நடையில் விளக்கமாகும். தமிழர், வண்டு துளைத்த மூங்கிலைச் செப்பனிட்டுக் குழலூதி னர்; குமிழங் கொம்பை வில்லெனவளைத்து. நரம் பிணைத்து யாழிசை மீட்டினர். தமிழகமே ஓர் இசையரங்காயிருந்தது. அதில் பாட்டுடன் யாழும், குழலும், முழவும், விறலியர் கூத்தும் கிளர்ந் தெழுந்தன. வண்டும், பறவையும், அருவியும், தென்றலும் மங்கலப் பாடல்களுக்கு இயற்கைச் சுருதிபோல ஓங்காரித்தன. ஆடல், பாடல், அழகு, கவிதை, ஓவியம், சிற்பம் ஆகிய கலைகளில், தமிழர சியே புகழ்முடி பூண்டாள். அக்காலத்தில், தமிழர் கண்ட ஏழிசையும், பன்னிரு ராசியும், பண்களும், பாணிகளுமே பிற்காலம் கருநாடக (கரைநாடக) இசையாகி, வடக்கேயும் சென்று பார்ஸி அரபி யுடன் கலந்து இந்துஸ்தான் இசையுமானது! இந்

2

திய இசைச்செல்வம், தமிழிசைச் செல்வமே! இப்போது வழங்கும் கர்நாடக இசையை யாரும் வடக்கிருந்து கொண்டு வரவில்லை. அதை வளர்த்த தாஸர், ஐயர், தீட்சிதர், சாத்திரிகள் அனைவரும் தென்னாட்டவர். அதைப் போற்றும் இசைவாணர் தமிழர். தமிழுக்குரிய பன்னிரு பாலைகளும், நூற்று மூன்று பண்களாக விரிந்து விளங்கியதைச் சங்கநூல்களால் அறிகிறோம். ஆனால், எதற்கும் காலச்சோதனை யுண்டு. தமிழுக்கும் அச்சோதனை வலுவாக வந்தது. கடல் தமிழை விழுங்கியது. போர்வினைகள் நமது வினையை மாற்றின. அரசியற்போர்களும், சமயப் பூசல்களும், படையெடுப்புகளும், மாந்தர் உறக்கமும், காலக்கோளாக வந்து, நம் பழஞ்செல்வங்களை உருத்தெரியாது மாற்றிச் சிதைத்தன. பரிபாடல், சிலப்பதிகாரம் (அரும்பதவுரை) முதலியவற்றினின்றும் பழஞ்செல்வங்களை ஒருவாறு ஊகித்தறியலாம். தமிழர் ஏழாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக இசைச் செல்வம் பெற்றவர்; தமிழிசையே மற்ற இசைச் செல்வங்களுக்குத் தாயூற்று என்பதை அசைக்க முடியாத ஆதாரங்களுடன் விளக்க, இன்று நம் புலவர்கள் மார்தட்டி நிற்கிறார்கள். முத்தமிழ்ச் செல்வம்பெற்ற முழுத்தமிழர் எவரும், தமிழிசையின் பழைமையிற் பெருமை கொள்ளலாம்; இனி, இப்போது வந்துகொண்டிருக்கும் புதுப்பெருமையிலும் பங்கு கொள்ளலாம்!

## ச. அருள்மொழி

தமிழுக்குப் புதுப்பெருமை எங்கிருந்து வந்தது? அது நீண்டகாலமாகத் தமிழர் உள்ளத்திற் குமு

றிக்கொண்டே யிருந்தது. தமிழ் அருட்சுவை பெற்ற திருமொழி; தமிழிசை கடவுளர் உள்ளத்தையும் இளக்கும் இனிமை வாய்ந்தது. அப்பர், சுந்தரர், சம்பந்தர், மணிவாசகர், காரைக்கால் அம்மையார், நம்மாழ்வார், ஆண்டாள் போன்ற அருட்புலவர், தமிழிசையால் அற்புதங்கள் நிகழ்த்தினர்; பேரின்பப்பயன் பெற்றனர். தமிழிசையின் பெருமையால் நீற்றறை குளிர்ந்தது; நஞ்சும் அமுதானது; வெறிபிடித்த யானையும் வணங்கியது; கல்லும் தெப்பமானது; இறந்தாரும் எழுந்தார்; சாம்பலும் பூங்கோதையானது! தற்போதுலகை ஆளும் மொழிகள் பிறக்குமுன்பே, அவற்றில் இசை தளிர்க்கு முன்பே, நமது தமிழ் மலர்குலுங்கி விரிந்து நறுமணம் வீசியது. தமிழிசை அனல்வாதம் புனல்வாதங்களை வென்று, ஐம்பூதங்களுடனும் போரிட்டுக்கொண்டு, எப்படியோ காலத்தை எதிர்த்து, இன்னும் முரசுகொட்டி முன்னேறுகிறது. தோற்கருவிகளும், துளைக்கருவிகளும், நரம்புக் கருவிகளும், கஞ்சக்கருவிகளும் நூற்றுக்கணக்காகத் தமிழிசைக்கு இன்றும் வெற்றி ஒலிக்கின்றன. ஐந்து நிலப்பண்பையும் இலக்கியத்தில் அமைத்து இயற்கையோடிணைந்து வாழ்ந்தனர் தமிழர். தமிழர் நிலத்திற்கேற்ற யாழையும் பாட்டையும் ஆக்கினர். யாழில் எத்தனை வகை! முழவில் எத்தனை வகை! முல்லையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தல்யாழ், பாலையாழ், பேரியாழ், செங்கோட்டியாழ், யாமயாழ்! அவற்றிற்கேற்ற முழவுகள்! இசைப்பாடல்

---

இசைநுணுக்கத்தையும் இசைக்கருவிகளையும் "சிலம்புச் செல்வ"த்தில் விளக்கியிருப்பதைக் காண்க.

கள் தமிழகத்தை நல்லிசைப் பொழிலாக்கின. யாழூக்கடங்காத யாழ்முரிப்பாடல்களும் தமிழிசையின் மாண்பை விளக்கின. மூவேந்தர் காலத்திலும் தமிழர் வாழ்க்கை இன்னிசை யருவியாக, இயலிசைத் தென்றலாக, பேரிசை யலைகளாகத் துள்ளியெழுந்து, இன்பக்கூத்தாடி மிளிர்ந்தது. தமிழர் கடவுள் கூத்தும் இசையும் கூடிய நடனக்கடவுளே!

## ரு. தேவாரப் பண்கள்

கடைச்சங்கக் காலம் இரண்டாம் நூற்றாண்டு என்பர். அப்போது, தமிழர் தமிழ்வீறுடன் வாழ்ந்தனர். அதன்பின்னர், ஐந்து நூற்றாண்டுகள் வரை நமது வரலாற்றில் ஒரு மாயத்திரை படர்ந்திருந்தது. முத்தமிழ் மன்னர் பேணிய தமிழிசை, அத்திரையில் மறைந்து திரிந்து, எவரெவர் கைகளிலோ சிக்கிச் சிதைந்தது. எனினும், அதன் வேர் பசுமையாகவே யிருந்தது. ஏழாம் நூற்றாண்டில், மீண்டும் அது தளிர்த்துப் பதின்மூன்றாம் நூற்றாண்டுவரையில் பூவுங் கனியும் குலுங்கியது. இக்காலமே தேவாரம், திருவாசகம், திவ்யப் பிரபந்தம் முதலிய தெய்வத்திருமறைகள், உள்ளத்தை அள்ளும் பண்ணமைதியுடன் எழுந்தன. ஏராளமான பாணர்களும் பாடினியரும் தமிழிசை வளர்த்தனர். இக்கால வரலாற்றை அறிந்த எவரும், தமிழருக்குத் தனிப்பெரும் இசைச்செல்வம் உண்டென்பதை மறுக்கத் துணியார். ச-ரி-க-ம-ப-த-நி என்ற ஏழு சுரங்களையும் தமிழர் ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ - என்ற நெட்டெழுத்துக்களாகப் பயின்ற

னர். குரல், துத்தம், இளி, உழை, கைக்கிளை, விளரி, தாரம் என்று அவற்றிற்குத் தமிழ்ப்பெயர் வழங்கின. ஒவ்வொரு சுரத்திற்கும் இடம், மாத்திரை, மணம், சுவை, ஓசைக் குறிப்புகள் எல்லாம் அமைத்தனர். (அவற்றின் விரிவு சிலம்புச் செல்வத்திற் காண்க). அக்காலம் 103 பண்கள் வழங்கின. மூவர் தேவாரங்களில் எல்லாப்பண்களும் நிரம்பிருந்தன. ஆயிரக் கணக்கான தேவாரப்பாசுரங்கள் தமிழர் அசட்டையால், திருப்புலியூர்க்கோயில் மூலையில் கறையான்களுக்கு விருந்தளித்துக் கரைந்துபோயின. நம்பியாண்டார் நம்பி அவற்றையும் மற்றுங்கிடைத்த திருப்பாடல்களையும் திருமுறைகளாக வகுத்தளித்துத் தமிழின் உயிரைக் காத்தார். சம்பந்தர் தேவாரம் சிறந்த இசைநயம் பெற்றது. அப்பர் சுந்தரர் பாடல்கள் இசைநயத்துடன் அரியபெரிய பொருட் செறிவுடையன. தேவாரம் திருப்புகழ் பாடினல், தமிழ் தெரியாதவர்கள்கூட (ஐரோப்பியர்கூட) இசைநயத்தைப் பாராட்டுகிறார்கள்! தேவாரம் பல பண்களில் அக்காலம் செய்யப்பெற்றிருக்கலாம். ஆனல், நமக்கெய்தியவை 24 பண்களே; மிச்சம் 79 கருநாடகத்திற் கலந்துவிட்டதாக அறிஞர் ஆராய்கின்றனர். இப்பண்களில் பகற்பண்கள் இராப் பண்கள் என உண்டு. காலத்திற்கேற்றபடி நம் இசைப்பண்கள் வகுக்கப்பெற்றவை. முற்காலப் பண்களுக்குப் பிற்காலம் இசையிலக்கணம் வகுத்த வடமொழிப்புலவர்கள் வடமொழிப் பெயர்களையே வைத்துக்கொண்டனர். தனித்தமிழ்ப் பண்களையும் அவை கொண்ட வடமொழிப் பெயர்களையும் கீழே காண்க:—

புறநீர்மை (பூபாளம்), காந்தாரம் (பைரவி), காந்தாரபஞ்சமம் (சங்கராபரணம்), கௌசிகம் (கேதாரகௌளம்), இந்தளம் (மாயாமாளவ கௌளை) தக்கேசி (காம்போதி), தக்கராகம் (கன்னடகாம் போதி), நட்டராகம் (பந்துவராளி), நட்டபாடை (நாட்டை), சதாரி (காமவர்த்தினி), பழந்தக்கராகம் (ஆரபி), பஞ்சமம் (ஆகிரி), குறுந்தொகை (நாதநாமக் கிரியை), கொல்லி (பிலகரி), கொல்லிக்கௌவாணம் (நவரோஜ்), நேரிசை (குறிஞ்சி), வியாழக் குறிஞ்சி (சௌராஷ்டிரம்), மேகராகக் குறிஞ்சி (நீலாம்பரி), அந்தாளிக்குறிஞ்சி (சாமா), செந்துருத்தி (மத்திமா வதி), திருத்தாண்டகம் (ஹரிகாம்போதி), சீகாமரம் (புன்னுகவராளி).

இந்த இராகங்கள் இன்னின்ன யாழ்களுக்குத் தான் பொருந்தியவை என்னும் பாகுபாடுகளுண்டு. எடுத்துக்காட்டாக, நட்டபாடை, அந்தாளிக் குறிஞ்சி, பழம்பஞ்சுரம், மேகராகக் குறிஞ்சி, கொல்லிக்கௌவாணம், பழந்தக்கராகம் வியாழக் குறிஞ்சி, நட்டராகம் முதலியன குறிஞ்சியாழுக் குரியன ; தக்கேசி, கொல்லி, இந்தளம், காந்தார பஞ்சமம், கௌசிகம், சீகாமரம் முதலியன மருத யாழுக்குரியன. சதாரி, செவ்வழியாழுக்குரியது. தக்கராகம், புறநீர்மை, காந்தாரம், காந்தார பஞ்சமம் முதலியன பாலையாழுக்குரியன. அந்த அருமையான யாழ்களெல்லாம் காலவெள்ளத்தில் மறைந்து போயின. அந்தப் பண்கள்மட்டும் தேவாரங்களில் உயிர் வைத்துக் கொண்டிருக்கின்றன. வீணையைத் தான் நாம் யாழ் என்று நினைத்துக்கொள்ள வேண்டி

யிருக்கிறது. அதனோடு, கோட்டு வாத்தியமுள்ளது. நமது பழந்தமிழ் இசைக்கருவிகள் பல வடநாட்டிலும் மேனாடுகளிலும் பெயர் திரிந்து உருமாறி வழங்குகின்றன.

தமிழிசைச் செல்வத்தை நினைப்பூட்டும் ஒரு பாசுரத்தைக் கேளுங்கள்!

"பண்ணும் பதமேழும் பலஓசைத் தமிழவையும்
உண்ணின்ற தோர்சுவையும் உறுதாளத் தொலிபலவும்
மண்ணும் புனல்உயிரும் வருகாற்றும் சுடர்மூன்றும்
விண்ணும் முழுதானான் இடம்வீழிம் மிழலையே."

(சம்பந்தர்)

என்னருமைத் தமிழர்களே, இப்படி நம் உள்ளத்தை அள்ளிய பழந்தமிழ் இசைகள் அனைத்தும் தனித் தமிழ் இசைகளே! தெலுங்கல்ல, இந்தியல்ல, ஆங்கிலமல்ல! விழித்துக்கேளுங்கள்! பதினான்காம் நூற்றாண்டுவரையில் நமது தமிழ்க்கொடி விடுதலை வீறுடன் வானெட்டப் பறந்துகொண்டிருந்தது.

## சா. படையெடுப்புகள்

பதினான்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மீண்டும் இருள் படர்ந்தது. இஸ்லாம் படையெடுப்பு வந்தது. தமிழின் பெருமையில் ஓர் இருட்டடிப்பு (Black-out) நேர்ந்தது.* நம்மவருக்குச் சனியன் பிடிப்பதெல்லாம் நமக்குள் இருக்கும் உட்சண்டைகளாலும், அவற்றைத் தூண்டிவிடும் குண்டுணிகளாலுமே.

* தாமரைக்குளம் முதலிய கதைகளில் இதைச் சரித்திர உதாரணங்களுடன் விளக்கியிருப்பதைக் காண்க.

விட்டல்ராஜ பாண்டியன் காலத்திலேதான் தமிழ்க் கொடிமரம் அசையத் தொடங்கியது. நம்மவர் இருவர் மனவேறுபாடுற்று, ஒருவர் விஜயநகரத்திற்குப்போய் கம்பனநாயக்கரை அழைத்து வந்து, மற்றவரைத் துரத்தினர். கம்பனநாயக்கர் தன்னை அழைத்து வந்தவரையே, "சக்ககா விச்ராந்தி தீசு கொண்டி" என்று மூலையில் உட்காரவைத்துவிட்டுப் பாண்டி நாட்டைக் கைப்பற்றினர். அவருக்குப் பிறகு விசுவநாத நாயக்கர் வந்தார். தெலுங்குப் புரோகிதரும், போர்வீரரும், ஒற்றரும், தெலுங்கிசைவாணரும் தமிழகத்திற் குடியேறினர். திருமலைநாயக்கன் தமிழ்கற்று, நமது தாய்மொழிக்குச் சிறிது ஆதரவளித்தான். அவன் வேண்டுகோளின்படியே குமரகுருபரசுவாமிகள் நீதிநெறிவிளக்கம் அருளினர். அக்காலம் திருமந்திரம், திருவாய்மொழிபோன்ற அருள்நூல்கள் தெலுங்கில் எழுதப்பெற்றன. நாயக்கர்மரபு தஞ்சையைக் கைப்பற்றியது. தஞ்சாவூரில் தெலுங்குமொழி பெரிதும் பரவத்தொடங்கியது. அப்போது, நம் தமிழிசைவாணர் பாடும் பாடல்களைக் கேட்டுக் கேட்டுத் தெலுங்குவாணரும் தமது தாய்மொழியில் இசை யாத்தனர். இதற்குள் நம் தமிழ் இசை நுணுக்கங்கள் மறைந்தன. மதுரையில் முன்னே அனல்வாதம், புனல்வாதம், சொக்கப்பானையெல்லாம் அமளியாக நடந்தன. எத்தனையோ தமிழேடுகள் சாம்பலாயின. அவற்றிற் சிக்கியே நம் இசைச்செல்வம் இலக்கண ஏடுகளை இழந்திருக்கவேண்டும்; அல்லது அவை வடமொழியும் தமிழும் அறிந்த புலவர் கையிற் சிக்கியிருக்கவேண்டும். எப்படியோ நமது இசைக்

கலை ஆரியவுருக்கொண்டு, தெலுங்கிலக்கிய நடை பயிலத்தொடங்கியது. நாம் பிறமொழிகளை வெறுக்கவில்லை; தமிழின் பெருமையைச் சிறுமை செய்யும் அறியாமையை நீக்க முயல்கின்றோம். பன்னிரண்டாம் நூற்றாண்டிலேதான் அடியார்க்குநல்லார் சிலப்பதிகார உரையெழுதினர். பதின்மூன்றாம் நூற்றாண்டில் சாரங்கமுனிவர் தமிழ்நாட்டில் வாழ்ந்து, நம் இசை நுணுக்கங்களையும் பழம்பண்களையும் நன்கறிந்து தமது சங்கீதரத்னகரத்தில் பெய்துவைத்திருக்கிறார். அவர் தௌலதாபாதில் இருந்துதான் எழுதினர். அதுவுந் திராவிடபூமிதான். நமது தமிழ் உச்சநிலையிலிருந்த பதின்மூன்றாவது நூற்றாண்டிலேதான் சங்கீதரத்னகரம் எழுதப்பெற்றது; 1425-ஆம் ஆண்டு காளிநாதர் அதற்கு விரிவுரை யெழுதினர். 150 ஆண்டுகளுக்குப் பிறகு சில இசையிலக்கணங்கள் எழுந்தன:—நர்த்தன நிர்ணயம், ராகமாலை, ராகமஞ்சரி, புண்டரீக விடலரின் ஸ்வராக சந்த்ரோதயம், 1610-ஆம் ஆண்டு செய்யப்பெற்ற சோமநாதரின் ராகவிபோதம், தாமோதரமித்திரர் செய்த சங்கீத தர்ப்பணம், அகோபல பண்டிதர் யாத்த சங்கீத பாரிஜாதம், சங்கீத சாகரம், சங்கீத கல்பதரு முதலியன. இந்நூல்களே வடநாட்டிலும் இசைக்கலைகளுக்கு ஆக்கமளித்து வழிகாட்டின.

பதினேழாம் நூற்றாண்டில் தஞ்சை விஜயராகவ நாயக்கரின் மந்திரியாயிருந்த கோவிந்த தீட்சிதர் பெரிய சம்ஸ்கிருதப்புலவர்; இசைக்கலையறிஞர். அவர் தென்னிசையும் வடமொழி நூல்களும் ஆராய்ந்து 72 மேளகர்த்தா இராகங்களை வகுத்தார்.

வேங்கடமகி இசையிலக்கணம் செய்தார். சதுர் தண்டிப்ரகாசிகை எழுந்தது. புரந்தரதாசர் இசைப் பயிற்சி நூல் வகுத்தார். சரளி, ஜண்டைவரிசைகள், அலங்காரம், கீதம், வர்ணம் கீர்த்தனையொழுங்கில் அவரே இசை யிலக்கணத்தை மாணவருக்கு எளிதாக வகுத்தளித்தார். இந்தச் சங்கீத இலக்கணங்களுக்கு இலக்கியமாக எழுந்தவை தியாக - தீட்சித - சாமா கீர்த்தனங்கள். மூவரும் அவரவர் வழிபடு கடவுளை இசைத்தார்கள். மூவரும் சமகாலத்தவர்கள்; திருவாரூரிற் பிறந்தவர்கள். இவ்வளவும் நடந்த தெல்லாம் எங்கே? நமது தமிழகத்திலேதான்! கோவிந்த தீட்சிதரும், வேங்கடமகியும் இசை வகுத்ததும், தியாகப்பிரம்மமும், தீட்சிதரும், சாமா சாஸ்திரிகளும் அரிய ஆந்திர ஆரியமொழிக் கீர்த்த னங்கள் பாடியதும் இந்தத் தமிழ் மண்ணிலே தான்! அவர் பயின்ற இசைக்கலை வேறெங்கிருந்தும் குதித்துவிடவில்லை. அவர்கள் நிலவகையால் தமிழரே! ஆதலால், அவர்கள் தந்த இசைச்செல்வமும் தமிழர் செல்வமேயாகும். அவற்றைப் போற்றி வளர்த்த வரும் தமிழரேயாவர்.

## எ. தமிழும் வளர்ந்தது

இக்காலம் தமிழிசை உறங்கவில்லை. இதற்குமுன்பே அருணகிரிநாதர் ஒப்புயர்வற்ற சந்தக் கீதங்களைப் பாடி முருகனுக்குத் திருப்புகழ்மாலை சூட்டினார் நான் உலகில் பல நாட்டார் இசைகளைக் கேட்ட துண்டு. ஆனால், அருணகிரிநாதர் சந்தக் கவிதை போன்ற இசைச் செல்வத்தை யாங்கும் கேட்ட

தில்லை. திருப்புகழ் ஒன்றுமட்டுமே தமிழ்மொழியை இணையற்ற இசைச் செல்வமாக்க வல்லது. நமது மொழி யறியாதவர்கூட அதைக்கேட்டு மகிழ்வர். பட்டினத்தார், தாயுமானவர், அருட்சோதி வள்ளலார் இம்மூவரும் திருவடியார் கூட்டத்தில் வைத்து வணங்கவேண்டிய அருட்பெரியார்கள். இவர்கள் இயற்றிய பாடல்கள் இராகமாலிகைகளுக்கும், தாளத்துடன் பாடவும் ஏற்றவையாம். பொருளாழத்திலும், உள்ளத்தை உருக்கும் இனிமையிலும், உலக இலக்கியத்தில் இவற்றிற்கு இணையேயில்லை. வேதோபநிடதக் கருத்துகளெல்லாம், சித்தாந்த வேதாந்த தத்துவங்களெல்லாம், பொதுமறை உண்மைகளெல்லாம், இந்த அருளாளர் மூவர்வாக்குகளில்அடங்கியுள்ளன. பன்னிரு திருமுறைகளுடன் தாயுமானுர், பட்டினத்தார், அருணகிரியார், வள்ளலார் ஆகிய நால்வர் இசையமுதத்தையும் சேர்த்து மதிக்கவேண்டும். தியாக-சாமா-தீட்சிதருக்கு முன்பே அதே அன்புருக்கத்துடன் எழுந்து, தில்லையப்பனைப் பாடி முத்திபெற்ற மகான் முத்துத்தாண்டவர். முத்துத்தாண்டவர் பாடல் சிறந்த இசைநயங்கொண்டது. அவருக்குப் பிறகு அருணாசலக் கவிராயர் பெரும்புலமைத் திறத்தால் இராமாயணக் கீர்த்தனங்களைச் செய்தார்.

இவர்களுக்குப் பிறகும் நம் இசைச்செல்வம் வற்ருவெள்ளமாகப் பெருகியது. ஏறக்குறைய தியாகராஜர் காலத்திலேயே வள்ளலார், வேதநாயகம் பிள்ளை, கோபாலகிருஷ்ண பாரதியார், கவிகுஞ்சரி பாரதியார், மகா வித்துவான் மீனட்சிசுந்தரம்பிள்ளை, காவடிச்சிந்து அண்ணமலை ரெட்டியார் முதலிய

பெரியார் தமிழ் வளர்த்தனர். தமிழ்க்கவியும் இசையும் இக்காலர் உச்சநிலை பெற்றிருந்தன. இக்காலத்தில் விளங்கிய கனம் கிருஷ்ணையரும், மகா வைத்திய நாதையரும், இராமசாமி சிவமும் தமிழிலேதான் கச்சேரி செய்தனர். இராமசாமி சிவம் பெரிய புராணக் கீர்த்தனங்கள் பாடினர். தம்பி வைத்தியநாதர் அவற்றை இசைத்து வந்தார். என்னருமைத் தமிழர்களே, தமிழிசையின் வரலாறு இப்படி ஆற்றொழுக்காகப் பெருகிக் காலத்திற்குக்காலம் தாவிச்சென்றது. என் தந்தை காலத்திலேதான் மகா வைத்தி நாதர் இருந்தார். சிவகங்கை இரட்டைத் தெருவிலே தான் அவருக்கு இணையான சின்னவைத்தா, பெரிய வைத்தா என்னும் இசைப் புலவர்கள் இருவரும் இருந்தனர். எங்கள் ஊர் மன்னர் கௌரி வல்லபத் தேவர் பெரிய தமிழ்ப்புலவர். இராமநாதபுரம் முத்து ராமலிங்கசேதுபதி முருகோபாசகர், தமிழறிஞர்; தாமே பல கீர்த்தனங்கள் புனைந்து இசைநயத்துடன் பாடியவர். இந்த இரண்டு மன்னர் இசையரங்குகளிலும் நாடோறும் தமிழிசையே ஒலித்தது. இதே காலத்திலேதான் தமிழில் புதிய இசைநயம்பொழிந்த காவடிச்சிந்து அண்ணாமலை ரெட்டியார் வாழ்ந்தார்.

## அ. தமிழிசைக்கே பட்டம்!

ஒரே ஒரு நிகழ்ச்சியைக் கேளுங்கள்: கல்லிடைக் குறிச்சியில் அப்போதிருந்த சின்னப்பட்டம் சுப்பிரமணிய தேசிகரே வைத்தியநாதருக்கு "மகா வைத்தியநாதையர்" என்ற பட்டமளித்தவர். பட்ட

மளிப்பிற்கு சிவகங்கை சின்ன-பெரியவைத்தாக்களும் சென்றிருந்தனர். மூன்று பேரும் தமிழிலேதான் கச்சேரி நடத்தினர். பட்டமளிக்கையில் தேசிகர் பெரிய வைத்தியநாதையர் கருத்தைக் கேட்டார். பெரிய வைத்யநாதையர் எழுந்து, 'எனக்குத் தமிழிசைதான் விருப்பம்; என் பெயருக்குமுன் "பெரிய" என்ற பட்டம் இயல்பாகவே ஏற்பட்டிருக்கிறது. "இந்த இளம்புலவரின் இனிய தமிழிசைக்கே சந்நிதானம் தரும் பட்டம் தகும்" என்றார். தேசிகர் இளம் வைத்தியநாதரை—மகா வைத்தியநாத சிவமாக்கி, பெரிய வைத்தா கையால் சால்வை போர்த்தினர்.

ஒரு தடவை மகா வைத்தியநாதையர் சென்னை கவர்னர்முன்கூடக் கச்சேரி பண்ணினர்; தமிழிலேயே ஆங்கில மெட்டுகளில் பாடல்களைப் புனைந்து பாடினர். ஐரோப்பிய உள்ளங்கூட அப்பாடல்களை மெச்சியது. இந்தப் பேரிசைப் புலவர்களுக்குப்பிறகு தமிழுலகில் ஹரிகதைகளே சிறப்பாக வலுத்தன. அவற்றுள் இராமதாஸ் சரித்திரம் ஒன்று. அது முற்றிலும் தெலுங்குப் பாடல்களாலேயே ஆனது. அதனோடு சதிருக்கு க்ஷேத்ரிய பதங்கள் எழுந்தன. ஜனங்கள் மெல்ல மெல்ல பாகவத கோஷ்டிகளின் குலுக்குப் பாட்டுகளில் மனமிழுந்து, தெலுங்குதான் இனிமை என்று நம்பினர். அக்கால வித்துவான்கள் தியாகராஜ கீர்த்தனங்களில் ஈடுபட்டுத் தெலுங்கை அவசியமாகக் கற்றனர். வர்ணங்களெல்லாம் "எமிரா தாமஸமேலரா" என்று தெலுங்கிலேயே இருந்தமையால், அவர்கள் தெலுங்கே பாட்டிற்கு இசைந்தது என்று நம்பினர்கள்.

## ௧௦. சத்த யுத்தம்

இடையே முப்பத்தைந்து ஆண்டுகள், பாட்டுக் கச்சேரியென்றால், சிவசிவா, ஒரே சத்தச் சண்டை தான்; அமளிதான்! ஒரு வார்த்தை விளங்காது. பாடகர் தெலுங்கை உச்சரிப்பதே மகாகோரமாயிருக்கும். உச்சரிப்பு புகையிலேபோட்டுப் பேசுவதுபோ லிருக்கும். தமிழைக்கூட, "அழகுள்ள துரையிவர் யாரடீ?" என்பதை "அழ......குள்ள......துரை...... இவர் ஆறடீ......குள்ள துரை ஆறடீ தன்னனனனு" என்று பிர்க்கா வாங்குவார்கள்! தானம் தஹனம் ஆலாபனம், ஸ்வரம் பாடிவிட்டாலே போதும்! வாதாபி கணபதிம், ராமநீ சமானம், எந்துகு பெத்த்ல, நீநாம ரூபமுலகு, மங்களம்!......கைதட்டி முந்நூறு நானூறு வாங்கிக்கொண்டு செல்லவேண்டியதுதான்.

ஒரு செல்வர் வீட்டில் பாட்டுக்கச்சேரி நடந்தது. அவர் பேரன் சூட்டிக்கையான பையன்; கொஞ்சம் பாட்டும் இழுப்பான். அவனுக்குத் தமிழ்ப்பாட்டே பிரியம். பாட்டையா, "செல்லம், பாடகர் என்ன பாடுகிறார் என்று என்னிடம் வந்து சொல்லு; நல்லாப் பாடும்போது வருகிறேன்" என்று திண்ணையில் அமர்ந்தார். பாடகர் பிடித்தார் சங்கராபரணத்தில் அரைமணி நேரம்! சக்கையாகத் தொண்டையை உருட்டித் தீர்த்தார். பையன் ஓடி வந்தான்: "செல்லம், என்ன பாடுகிறார்?" "தாத்தா ஐயாவுக்கு சும்மா இழுத்துக்கிட்டு போகுது!" என்றான்; "அசடே, பல்லவி பாடுகிறார்; போய்க் கேள்!" என்றார் பெரியவர். பையன் சென்று மறுபடி

வந்தான்; "தாத்தா, பாட்டுக்கார ஐயா பல்லைப் பல்லைக் காட்டி 'ச்ச்ச்' என்று மிருதங்கக்காரரைக் கோவிக்கிறார்; சண்டை நடக்கிறது" என்றான். "சீ, அவர் சரளி போடுகிறாரடா; நல்லாக் கேளு!" என்றார். பையன் சென்று வந்தான். "பாட்டையா, எனக்கொன்றும் விளங்கவில்லை; அது நம்ம பேச்சே யில்லை'' என்றான். பாட்டனார், "அடே, அவர் தெலுங்கிலே பாடுகிறார்...கேள்!" என்றனுப்பினார். பாடகர் முடிவில் "நடமாடித் திரிந்த உனக்கிடது கால்'' என்ற காம்போதி கீர்த்தனத்தை எடுத்தார். பையன் ஓட்ட ஓட்டமாக ஓடிவந்து "தாத்தா வா, வா, ஐயா பாடுகிறார்..." என்று இழுத்துவந் தான்......பாட்டையாவும் காதுகுளிரத் தமிழிசை. நுகர்ந்தார்.

இம்மாதிரியே அக்காலம் தெலுங்குப் பாட்டு கள், பிடில், மிருதங்கம், ஜாலரா, கஞ்சிரா, மோர்சிங் எல்லாம் சேர்ந்து ஒன்றையொன்று கொன்று விடு வதுபோலப் பாய்ந்து பாய்ந்து சங்கீதயுத்தம் செய்து கொண்டிருந்தன. சபையோர் காது "தானனனா... தகிர்தினன்னத்தோம்" என்ற சத்தங்களையே கேட் டது. பாட்டு உருப்படியாயில்லை. நமது மொழியில்லை. நமது உள்ளத்தில் தைக்கவில்லை. பணத்தையும் கொடுத்து, நமது தாய்மொழிக்கு ஒரு பயனுமில்லா மல், தமிழர் ஏமாறியிருந்தனர். பாட்டின் பயன் கிடைக்கவில்லை.

இந்த ஏமாற்றத்தைப் போக்க, அக்காலத் திலேயே சில புலவர்களும் இரசிகர்களும் எழுந்தனர். பலர் கச்சேரி சதிர் முதலியவற்றிற்குப் போவதே

யில்லை. வரவரப் பாட்டுக் கச்சேரி, ஒரு பகட்டுக் கச்சேரி யானது! பொது மக்கள் பெரும்பாலும் கதை—நாடகங்களையே விரும்பினர். ஏனெனில், அவற்றில் பாதிக்குமேல் தமிழ்ப்பாட்டுகளே...... பெரும்பாலான மக்கள் இன்னும் தமிழிலேதான் பாடினர்; உயர்ந்த பாட்டுக் கச்சேரியைவிடத் தெருக்கூத்தை விரும்பினர். காரணம், தமிழ் உள்ளம் தமிழிசையைத் தேடியதுதான்.

இந்த நிலையைத் தவிர்க்க எழுந்த புலவர்கள் சிலர் மேடையிலும் அச்சிலும் தமிழிசையைப் போற்றிப் பிரசாரம் செய்தனர். அதன் பயனாகவே, பாட்டுக் கச்சேரிகளில் முழு மூச்சாகத் தெலுங்கைப் பிய்த்து வாங்கியபிறகு, கொஞ்சம் புண்ணியத்திற்காகத் திருப்புகழ், தேவாரம், காவடிச்சிந்து, தெம்மாங்கு ஆகிய தமிழ்ப் பாடல்கள், 'துக்கடா, சில்லறை' என்னும் பெயரால் இடம்பெற்றன. அந்தத் துக்கடா பாடும்போது சபை உற்சாகங் கொள்ளும். ஏன்? மொழி நமது மொழி. பாடகருக்கு வரும்படி செட்டிநாட்டிலேதான் அதிகம். தனவைசியர்களுக்குத் தேவாரங்கள் பிரியமாதலால் அவர்களை மகிழ்விக்கவே சிலர் பாடி வந்தனர். பாடகர் உள்ளம் தெலுங்கிலேதான் ஊறிப்போயிருந்தது. அந்த உள்ளத்தில் தமிழமுதம் ஊறச் செய்த பெருமை, இன்று தமிழிசை இயக்கத்திற்கே கிடைத்தது!

## கo. தமிழிசை இயக்கம்

ஒவ்வோர் இயக்கமும் தக்க தலைவரொருவரால் வெற்றி பெறுகிறது. தமிழிசை வேண்டுமென்று

பல்லாண்டுகளாகப் பேசிவந்தோம், எழுதிவந்தோம். ஆனால், அதற்கேற்ற தலைவரொருவர் வந்த பிறகே இயக்கம் உருக்கொண்டு, திருக்கொண்டு வெற்றி பெற்றது.

அந்தத் தலைவரை அறியாத தமிழர் உளரோ? அன்பு வள்ளல் ராஜா ஸர் அண்ணாமலை செட்டியார் அவர்களின் ஆர்வத்தினாலும், வண்மையாலும், உழைப்பாலுமே இன்று தமிழிசை வெற்றிக்கொடி நாட்டியுள்ளது. அரசர், 1929-ஆம் ஆண்டு அண்ணாமலை நகரில் இசைக்கல்லூரி நாட்டித் தகுந்த புலவர்களைக்கொண்டு, யாழும் முழவும் வாய்ப்பாட்டும் கற்பித்துத் தமிழகத்தில் உண்மையான இசைவாணரை உண்டாக்கினார்; தமிழருக்குத் தமிழிசையே இனிதெனச் சொல்லி, இவர் அதற்காகத் தாமே ஏராளமான செல்வங் கொடுத்து, மேற்கொண்டு நான்கைந் திலட்சரூபாய்ம் சேர்த்து, சென்னையில் தமிழிசைச் சங்கத்தை உறுதியாக நாட்டியுள்ளார். அண்ணாமலைக் கழகத்தில் தக்க புலவர்களைக் கொண்டு, பழந்தமிழ்ப் பாடல்களையும், புதிய இசைப் பாடல்களையும் தொகுத்து வெளியிட்டுப் பாடச் செய்து, நாடெல்லாம் தமிழோசை பரவச் செய்த பெருமை செட்டிநாட்டரசரையே சார்ந்தது. தமிழர்கள் அவருக்கு எக்காலும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறார்கள். அரசர் யாருக்காகத் தமிழிசை வேண்டுமென்கிறார்? தமிழர் நலத்திற்காக. தமிழிசையை எதிர்ப்பவர், தமிழருக்கு வந்த பெருநலத்தை எதிர்ப்பவராவார்; தமிழின் முன்னேற்றத்திற்கே இடர்செய்பவராவார். அப்

படிச் செய்ய எந்தத் தமிழனும் ஒப்பான். இனித் தமிழிசை யியக்கத்தை யாரும் தடுக்கவோ, நிறுத் தவோ முடியாது!

தமிழிசை இயக்கம் அசைக்கமுடியாத உறுதி கொண்டது; தமிழர் உள்ளத்தில் ஊன்றி வளர்வது; அஃது ஒரு சாதியிலோ மதத்திலோ கட்டுப்பட்ட தன்று; குறுகிய சுயநல இயக்கமன்று; அரசியல் சூழ்ச்சியன்று; பிறமொழி வெறுப்பன்று. தமிழிசை யரங்குகளில் தெலுங்கு, இந்துஸ்தானிப் பாடல்களும் பாடலாம்; ஆனல் பெரும்பாலும் தமிழ்; முதலும் முடிவும் தமிழாயிருக்க வேண்டும்; தமிழின் உயிரை யும் மதிப்பையும் காக்க இவ்வாறு செய்யவேண்டி யிருக்கிறது. இசை ஒரு மொழிக்குப் புகழ்தரும்; இனிய ஓசையுடன் உயர்ந்த பாட்டும் சேர்ந்தே இசை; பாட்டு அவரவர் தாய்மொழியிலிருந்தாலே பயனுகும்; இன்றேல் வெறும் சத்தக் கச்சேரியாகத் தானிருக்கும்! மனதார நுகரும் பாட்டு தாய் மொழிப் பாட்டே. தெலுங்கில் பத்துப் பதினைந்து கீர்த்தனைகளை உருத்தள்ளித் தமிழவையில் பாடுவது, வேதமந்திரங்களை உருத்தள்ளி ஒப்பிக்கும் புரோகிதம் போலாகும். சங்கீதப்புரோகிதம் வேதப்புரோகிதம் போல்பொருள்விளங்காத கடன் கழிப்பாகவே யிருக் கும்; அது புரோகிதருக்கும் விளங்காது, கேட்பவ ருக்கும் விளங்காது. தமிழர் பிறமொழிக்கு ஏன் அடிமையாயிருக்க வேண்டும்? தமிழில் அரிய பாடல் களில்லையா? பழையபாடல்கள் ஆயிரக்கணக்கா யிருக்கின்றன; ஆயிரக்கணக்கான புதிய பாடல் கள் இன்று முழங்குகின்றன; இல்லைப் பாட்டிற்கு

இடமில்லை. தமிழ் சங்கீதத்திற்குத் தகுதியில்லையா? தமிழைவிடத் தகுதியான மொழி யுண்டா?

அப்பரையும், மாணிக்கவாசகரையும் ஈன்ற தமிழ்மொழி இசையினிமையால் அற்புதங்கள் செய்ததே! கடவுட் கலப்பெய்திய அருளாளர் தமிழிசையை வளர்த்தார்கள். இன்றும் அருளாவேசம் பெற்ற கவியோகிகள் இருக்கிறார்கள்!

சிலர் இசைக்கு மொழிவேறுபாடு வேண்டுவதில்லை என்கிறார்கள்; அப்படியானால் தமிழ் மொழியில், நமதுதாய்மொழியில், பாடுவதைத் தடுப்பதேன்? மொழி நயமில்லாத பாட்டு, புள்ளொலி விலங்கொலி போன்று இனியசத்தமாகவே யிருக்கும். இசைக் கருவிகள் கூட நமக்குப் பழக்கமான ஒரு பாட்டை மீட்டினால், நாம் மனதார அனுபவிக்கிறோம். இன்றேல் காதுகேட்கும்; மனம் உருகாது. சாகித்யம் சோறுபோலும்; சங்கீதம், குழம்பு ரசம் போலும்; சோறின்றிக் குழம்பு ரசம் பயனில்லை; சோற்றுடன் கலந்துண்டாலே இவை பசியாற்றும். பாட்டும் இசையும் நிலமும் நீரும் போன்றவை. பாட்டினிமையால் இசையில் இனிமை காண்கிறோம்.

சிலருக்கு எதையெடுத்தாலும் சூழ்ச்சிதான்! "ஐயா, தமிழர் ஒன்றாய் விடுங்கள்!" இஃது இன்னார் சூழ்ச்சி! "ஐயா சமரஸம் பேணுங்கள்."; "தேனும் விளக்கெண்ணெயும் வேப்பெண்ணெயும் சமமாகக் கலந்து சாப்பிடும்; உமதுசமரஸத்தைப் பார்ப்போம்." "ஐயா, தமிழர் தமிழில் பாடுங்கள்"; "இஃது அரசியல் சூழ்ச்சி!" இவ்விதமாக மொட்டைத்தலைக்கும் முழங்

காலுக்கும் முடிச்சுப் போடும் குதர்க்கவாதிகள் எக்காலத்திலும் உண்டு. இசையியக்கம் அரசியலன்று ; அது தமிழர்மனமொப்பி நடத்தும் கலையியக்கம் என்பதை அழுத்தமாகச் சொல்லுவோம்.

தாய்மொழியிசையை உலகெங்கும் எப்படிக் காக்கிறார்கள் என்பதைச் சற்றே ஆராய்வோம்:

## கக. இந்துஸ்தான் சங்கிர்த்தனம்

இந்துஸ்தான் சங்கீர்த்தனம், சாமவேதத்திலிருந்து எழுந்ததென்பர். பௌத்தர்களும் ஜைனர்களும் இசைபாடியே சமயப்பிரசாரம் செய்ததாகத் தெரிகிறது. இராமாயணம், பாரதம், காளிதாச - பவபூதி நாடகங்களில் இசைக்குறிப்புகள் பல உண்டு. பாணினிக்கு முன்பே இசைக்கலை வளர்ச்சிபெற்றிருந்தது. சந்திரகுப்தன் நாணயத்தில் யாழைக் காணலாம். அக்காலம் இசைக்கலை மிகப்பரவியிருந்தது. நாடகமும் கூத்தும் அவ்வாறே! ஆனால், வடஇந்தியா பல நூற்றாண்டுகளாக அமைதிகெட்ட அமர்க்களமாயிருந்தது. வந்த அன்னியர்கள் அனைவரும் அதன் கலைவெள்ளத்தையும், பொற்குவைகளையும் ஒட்டகம் ஒட்டகமாக, கப்பல் கப்பலாக அள்ளிச் சென்றனர். சீன யாத்திரிகர்கள், உரோமயாத்திரிகர்கள், கிரேக்க அலெக்சாந்தர் அனைவரும் கணக்கற்ற கலைச்சுவடிகளையும் நாட்டிலிருந்து கொண்டு சென்று, தம் தாய்க் கலைகளை வளர்த்தனர். நூற்றுக்கணக்கான இந்திய நூல்கள் சீனமொழிகளில் உலாவுகின்றன. இந்திய இதிகாசமும் கணிதமும் சோதிடக்கலையும் கிரேக்க ரோமக் கலைகளையே புதுக்கின. இங்கே இராமாய

ணம்போல், அங்கே இலியாது (Illiad); இங்கே பஞ்ச தந்திரம்போல், அங்கே ஈசப்கதைகள் எழுந்தன.

இந்தியாவிலிருந்து ஒருகாலம் பாரசீகமன்னன் பதிறுயிரம் இசைவாணரை வரவழைத்தான். அவர்களிடம் கற்ற பாரசீக இசைவாணரே தமக்கென இசைவகுத்துக் கொண்டனர். அங்கிருந்து இசைக்கலை அரபி நாட்டிற்கும், இஸ்பானியத்திற்கும், கிரீக் ரோம் நாடுகளுக்கும் பரவியது.இந்திய சங்கீர்த்தனத்திலுள்ள ஸ்வரங்களே ஐரோப்பிய சங்கீர்த்தனத்திற்கும் ஊற்றுக்கண்ணுகும். இங்கே நாம் 72 மேளகர்த்தா ராகங்கள் பாடுகிறோம். ஐரோப்பியர் மேஜர் ஸ்கேலில் (Major Scale) தீரசங்கராபரணம், மைனர் ஸ்கேலில் (Minor Scale) கீர்வாணி, மெலொடிக் மைனர் ஸ்கேலில் (Melodic Minor Scale) நடபைரவி ஆகிய மூன்றே இராகங்களை வைத்துக்கொண்டே இசையளக்கின்றனர். இந்த இராகங்களைத்தவிர நம் மற்ற இராகங்களை அவர்கள் உணர்வதில்லை. இந்திய சங்கீதத்தின் தூய வடிவம், நமது கரைநாடக சங்கீதமான தமிழிசையே ; அடுத்தபடியாக இந்துஸ்தான் பாணி. கரைநாடகம் கனகாங்கிப்பண்ணிலும் இந்துஸ்தான் பிலாவல் பண்ணிலும் சார்ந்து நிற்கும். இந்துஸ்தான் சங்கீர்த்தனம், பார்ஸி அரபி இசைக்கலையுடன் கலந்து பதினேராம் நூற்றுண்டிலேதான் உருக்கொண்டது. இஸ்லாமிய மன்னர், தமது உல்லாசத்திற்காகவே அதை நன்ருகவளர்த்தனர். ஸூஃபி இஸ்லாமியர், வேதாந்தக் கொள்கையினர்.அவர்களே இந்துக்களுக்கும் விருப்பமானபடி இந்துஸ்தான் இசைக்கலையைப் போற்றினர்கள். இஸ்லாம் துறவிகள் ஆடிப்பாடி

அன்புசெய்தனர். சுல்தான் ஃபெரோஸ்ஷா காலத் திலேதான், 1237-ஆம் ஆண்டில், சாரங்க தேவர் சங்கித ரத்னகரம் செய்தார்.

அல்லாவுதீன் கில்ஜி, பெரிய சங்கீத ரசிகன். அவனிடம் அரிய புலவர் இருந்து இசைப்பணி புரிந்தனர். அவருள் அமீர் குன்ஸ்ரூ என்னும் புலவனே ஸிதார் கண்டுபிடித்தான். அல்லாவுதீன் தட்சிணத்தை வென்று அங்கிருந்து கருநாடக சங்கீதவித்துவான்களைத் தில்லிக்கு அழைத்து வந்து, அவர்களைக்கொண்டு இசைபரப்பினன். அவருள் விஜயநகரம் கோபால நாயக் மிக்க புகழ்பெற்று விளங்கினர்.

முகம்மது துக்ளாக், மற்றொரு சங்கீதப் பித்தன். அவன் இசைமாளிகை கட்டி, பாட்டும் சதிரும் கண்டான். விருந்தாளிகள் வந்தபோதெல்லாம் அக்கால அரசர், பாட்டு, சதிர்க்கச்சேரி வைப்பது ஒரு மரியாதையாயிருந்தது. நாளடைவில் புதுப் புது இராகராகிணிகளும், மெட்டுக்களும், க்யால், கஃஜல், டப்பா, தோம்ரி, துருபதம் முதலிய இசை வகைகளும் எழுந்தன.

அக்பருடைய காலத்திலேதான் இந்துஸ்தான் இசைக்கலை உச்சநிலை பெற்றது. ஹரிதாஸின் உருக்கமான கீதமும், தான்ஸேனின் இனிய பாட்டும் இசைக்கலையை அமோகமாக வளர்த்தன. அக்பரிடம் 38 பேரிசைவாணர் இருந்ததாக அயின் அக்பாரி சொல்லுகிறது. அக்காலமே மீராபாய், துளசிதாஸ், ஸூர்தாஸ், இரவிதாஸ் முதலிய பேரிசைப் புலவர்மணிகள் பக்தி பரவசராக விளங்கி

ஞர்கள். கபீரின் பாடல்களும் கிரந்த சாகேப் பாடல்களும் இசைக்கலையைப் பொதுமக்களிடையே பரப்பின.

ஆனல், தான்ஸேனுடன் இலட்சியகீதம் மறைந்தது. தான்ஸேன் குவாலியரில் அடங்கினன். அவன் சமாதில் ஒரு புளியமரம் உள்ளது. அதில் இலை பறித்துண்பதுடன் பாட்டு வந்துவிட்டதென்று நம்மவர் நம்பினர். போதாக்குறைக்கு ஔரங்கசீபு, "இசைக் கலையா ? அதை ஆழப்புதைத்து விடுங்கள் !" என்ருன். பிற்காலம் அங்குமிங்கும் இசைப்புலவர் எழுந்து தம்மாலானதைச் செய்து கொண்டிருந்தனர். தான்ஸேன்கலை இருகிளையாகி, குவாலியரிலும் இராம்பூரிலும் வளர்ந்தது. கும்பினி ஆட்சியில் வடநாட்டாருக்குச் சண்டைபோடத்தான் வேலை சரியாயிருந்தது. போர்ப்பறைதான் இசைக்கலை! சங்கீத ரத்னகரம், பாரிஜாதம் எல்லாம் தெற்கேதான் உயிர் வைத்துக் கொண்டிருந்தன. வடக்கே இசைக்கலை நலிந்து வந்தது.

சமீபத்தில் மகராஷ்டிரம் விழித்தெழுந்தது; பழைய இசைக்கலையை உயிர்ப்பித்து, முறைப்படி முன்னேற்ற முன்வந்தது. அந்தப் பணியை மேற்கொண்ட புண்ணியவான் பாத்கண்டே என்னும் பெரும்புலவர். அவர் நாடெங்கும் சுற்றி, இந்துஸ்தான் பாணியும் தேர்ந்தார்; கருநாடகக் கலையும் கற்ருர். அச் சமயமே தஞ்சை ஆபிரஹாம் பண்டிதர் தமிழிசை நூல் எழுதியிருந்தார். அவர் துணையாலேதான் பாத்கண்டே கருநாடகத் தமிழிசை கற்ருர். சங்கீதம் என்ருல், மராடியர் பாத்கண்டே என்பர்.

அவர் பூனு, பம்பாய், பரோடா முதலிய இடங்களில் இசைக்கல்லூரிகள் நாட்டத் துணைசெய்தார்; ஏராள மான மாணவரைப் பயிற்றினர். எளிய சம்ஸ்கிருதம், மராடி ஆகிய இரண்டிலும் அவர் எழுதிய லட்சிய ஸங்கீதகிரந்தங்களே இன்று இந்துஸ்தான் சங்கீதத் திற்கு ஆதாரமாக விளங்குகின்றன. அவருக்கடுத்த படியாக விஷ்ணுதிகம்பரர் என்னும் இசைவாணர் பக்திபரவசங் கொண்டு, பம்பாயில் கந்தர்வ வித்யால யம் நாட்டி, அரிய இசைவாணரைத் தயாரித்தார். மாணவருக்கேற்ற இசை நூல்களை அவரே முதன்முதல் இந்தியில் ஆக்கி வெளியிட்டார். தம் மாணவருடன் அவர் இசைபாடி நர்த்தனம் செய்யும் காட்சியைக் கண்டவர் மனம் உருகும். காசியில் ஸ்ரீ சிவேந்திர நாத வசு யாழிசையில் பெரும்புகழ் பெற்றவர்; அவர் தற்காலமுறைப்படி இந்தியும் ஆங்கிலவிளக்கமும் கலந்து, மாணவருக்குச் சங்கீதபாடபுத்தகங்கள் வகுத் தார். அவர் நூல்களே இன்று காசி இந்துக்கழகத் தில் பாடமாயிருக்கின்றன. அதியா பீகம் ரஹமீன் என்னும் இஸ்லாமியப் பெண்மணி, இந்துஸ்தான் இசைக்கலையில் தேர்ச்சி பெற்றவர். அவருடைய கணவர் சித்திரம் வல்லவர். இப்பெண்மணி ஆங்கிலத் தில் இந்தியசங்கீதத்தைப் பற்றி ஓர் அரிய நூலை எழு தியிருக்கிறார்; அதில் வடநாட்டுச் சங்கீதக் கலையின் நுணுக்கத்தை விளக்குகிறார்; இவர் "தென்னாட்டிலே தான் இந்திய இசைக்கலை மாசற்றிருக்கிறது" என்கிறார். வடநாட்டு இராகங்கள் பல நமது இசையிலும் பயி லுகின்றன. வடநாட்டிசையில் இராகம் ஆணிசை; இராகிணி பெண்ணிசை. இவற்றுள்ளும் சிவமதம், காளிநாதமதம், பாரதமதம், ஹனுமான்மதம் என்று

நான்கு வேறுபாடுகள் உண்டு. ஒவ்வோர் மதத்திற்கும் ஐந்தாறு இராகங்கள், அவற்றிற்கு மனைவியாக இராகிணிகள், இருவருக்கும் பிறந்த பிள்ளைகள்-ஆக இசைக்குடும்பங்கள் பலவகையாக இருக்கும். ஷட்ராகம், ஸ்ரீராகம், நாட்டை, மேகராகம் தீபகம் முதலியவை முதன்மையான இராகங்கள். காளிங்கதம், அசாவேரி சாரங்கா, தோடி, ஸ்ரீ, பூபாளி, கேதாரம், ஹம்பீர், சாயாநாட்டை, ஜைஜவந்தி, பிலாவல், மார்வா, பூர்வீ, யமுனகல்யாணி, காம்போஜி, காபி முதலியன முதன்மையான இராகிணிகள். இவற்றிடைப் பிறந்த மக்கள் பலர். ஒவ்வோர் இராக இராகிணிக்கும் இலட்சணம் காட்டிப் படம்போட்டு நூல்கள் வெளியிட்டிருக்கிறார்கள். உதாரணமாக:

ஸ்ரீராகம்: பதினெட்டு வயது அழகன்; இளவரசன்போல் வசீகரமானவன்.

நாட்டை: போர்வீரன்; போர்செய்கிறான்; உடலில் இரத்தம் ஒழுகுகிறது. ஒருகை குதிரையின் கழுத்தில் உள்ளது.

பூபாளி: பனிவெண்ணிறப் பாவை; மணங்கமழும் உடல் அமைதியளிப்பவள்.

கேதாரா: இவள் தீபகராகத்தின் மனைவி. (தீபகராகம் உருக்கமாகப்பாடுகிறவன். தீக்கே இரையாவானும்!) கேதாரா மரவுரியணிந்தவள்; கூந்தல் முடித்தவள்; நெற்றியில் பிறை கொண்டவள்; பாம்பணி பூண்ட தவச்செல்வி; சிவனையே எப்போதும் நினைப்பவள்.

இந்தமாதிரிப் படப்பொலிவுடன் எல்லா இராகராகிணிகளையும் விளக்கி, அதற்கேற்ற வர்ணங்கள்,

கீர்த்தனங்கள் உட்பட ஒழுங்கான நூல்கள் எளிய நடையில் இந்தியில் இன்று உலாவுகின்றன. பார்ஸீ மயமான கலையை பாத்கண்டே இந்திமயமாக்கி, இந்தியக்கலையாக விளக்கியிருக்கிறார். "அவரவர் தாய்மொழியில் பாட்டமையுங்கள்; ஆனால் இந்துஸ்தான் கலாவிதிகளை எல்லாரும் தழுவுங்கள்!" என்கிறார் பாத்கண்டே. உதாரணமாக, குஜராத்தியர் நீண்டகாலமாக இந்தியிலேதான் பாடிக்கொண்டிருந்தார்கள். இன்று பாத்கண்டேயின் நூல்களை குஜராத்தியில் எழுதி, அதன் விதிப்படியே குஜராத்தி மொழியில் பாட்டுக்களை ஏராளமாக உண்டாக்கியிருக்கிறார்கள். அப்படியே மராட்டியரும் மராட்டியப்பாடல்களைத் தொகுத்துப் பரப்புகிறார்கள். கலை பொது; கவனம் அவரவர் தாய்மொழிப்படியமைகிறது.

வங்காளத்தில் ராஜா ஸர் ஸுரேந்த்ரநாத தாகூர் இசைக்கலைக்கு அரியபணி செய்தார்; வங்கஸாகித்ய வித்துவான்களை ஊக்கினார்; ஏராளமான பரிசுகள் வழங்கித் தக்க புலவரைக்கொண்டு வங்கப்பாடல்களை ஆக்கி வெளியிட்டு, வீட்டுக்கு வீடு வங்கசங்கீர்த்தனம் முழங்கச் செய்தார். இன்று எந்த வங்காளியும், "வங்கம் என் தாய்மொழி. அதையே உயிர்போல விரும்புவேன்; அதிலேயே பாடுவேன்." என்கிறான்; "எனது இதய வீணையை மீட்டுவது, வங்கத்தாயின் திருக்கரங்களே" என்று கவி இசைக்கிறான். வங்காளத்தில் தாகூர்போன்ற பேரிசைப் புலவர் தோன்றி, இசைக்கலைக்கு வேகமளித்தனர். சாந்திநிகேதனில் வங்க சங்கீர்த்தனத்திற்கு ஒரு

சிறப்பான இடமிருக்கிறது. தமது இசைக்கலையை வங்காளிகள் அச்சிலும் மேடையிலும் பரப்பிப் பிரசாரம் செய்கிறார்கள். பம்கிமின் வந்தேமாதரமும், தாகூரின், "ஜனகணமனவும்" இந்தியாமுழுதும் ஒலிக்கின்றன. அந்தமாதிரியே நமது தமிழ்ப் பாடல்களும் நாடெல்லாம் ஒலிக்கும்படி இசை வாணர் பிடிவாதமாகத் தமிழில்பாடிப் பிரசாரம் செய்ய வேண்டும். வங்காளிக்கு ஒருகலை தெரிந்தால், அவன் உலகெல்லாம் புகழ்பெறுகிறான். தமிழன்...?

## ௧௨. ஐரோப்பியக் கலை

இனி, ஐரோப்பாவில் தாய்மொழியிசையின் வரலாற்றைக் காண்போம். ஐரோப்பிய இசைக் கலை இந்தியாவிலிருந்து சென்றதே. "இந்தியாவே இசைத் தாய்; பைதகோரஸ் இந்தியாவினிடமே இசைகற்றான்" என்று வெண்புலவர்கள் தம் நூல்களில் எழுதியிருக்கிறார்கள். இங்கிருந்து சென்ற பண்களை வைத்துக்கொண்டு, அவர்கள் ஆயிரக்கணக்கான இசைநூல்கள் தொகுத்திருக்கிறார்கள்! நீண்ட காலமாக ஐரோப்பாவில் இத்தாலியப் பாடல்களே பரவியிருந்தன. சென்ற நூற்றாண்டில் ஜெர்மனி தலை நிமிர்ந்தது. 'இனி, நமது தாய்மொழியிலே தான் பாடவேண்டும். நமக்குத் தெளிவாக விளங்குவது இலத்தீனன்று, இத்தாலியமன்று; நம் உள்ளத்தைத் தொடுவது ஜெர்மானியமே" என்ற கிளர்ச்சி எழுந்தது. ஜெர்மனியில் அக்காலம் மொஜார்டு, பெதோவன், வாக்னர், ஹ்யூகோ உல்ப், ரிச்சார்ட் ஸ்ட்ரௌஸ் ஆகிய புலவர் மணிகள் எழுந்து இசைக்

கலையை வளர்த்தனர். கவிகளும் அவர்களுடன் ஒத்துழைத்தனர். மக்களும் தாய்மொழிப்பாட்டையே மதித்தேற்றனர். ஆதலால், ஜெர்மன் இசை இன்று ஐரோப்பாவை வென்று விளங்குகிறது.

நீண்டகாலமாக, பிரான்ஸில் ஜெர்மன் பாட்டே ஆதிக்கம் பெற்றிருந்தது. அது ஃபிரெஞ்சு மொழியையே மூலையில் தள்ளிவிட்டது. ஃபிரெஞ்சில் பாடத்தெரிந்தவர்கள் மனந்தளர்ந்தனர். இந்தத் தளர்ச்சியைப் போக்க பெர்லியோஃஜ் (Berlioz) என்னும் ஃபிரெஞ்சு இசைவாணர் எழுந்தார்; அரிய ஃபிரெஞ்சுப் பாடல்களைப்பாடி, மெட்டுகள் அமைத்துக் கச்சேரி நடத்தினர். முதலில் கேலி, நையாண்டி, கிண்டல் எல்லாம் அவர் முயற்சியை முச்சந்தியில் நகையாடின. "நீ மகா பெதோவனே?" என்று சிலர் தாக்கினர். "என் அருமை ஃபிரெஞ்சு சகோதரர்களே, ஜெர்மனியில் பிறந்த பெதோவனும், வாக்னரும் பெரிய பாடகர்களே. பெதோவனின் ஒன்பதாம் பண்ணிசை கலைச்சிகரமேறி விளங்குகிறது. என்றாலும், எனது தாய்மொழியைப் பிறர் காலடி மண்ணாக்க நான் விரும்பவில்லை; அதையும் இசைக் கலையால் உயர்த்தவே முயல்கிறேன். தாய்மொழிக்காக நான் செய்யும் சேவையை என்னவராகிய நீங்களே எள்ளி நகையாடினால், எனக்கு அவமானமன்று ; பிற்காலம் உங்களையே உலகம் நகையாடும்; நடத்துங்கள் உங்கள் கேலிக்கூத்தை ! நான் பேர் புகழ்வேண்டாமல், கதவை அடைத்துக்கொண்டு அடக்கமாக எனது தாய்மொழிக்கு உழைக்கிறேன்" என்றார் பெர்லியோஃஜ். அவர் வளர்த்த இசைக்கலை

ஃபிரெஞ்சுமொழிக்கே தனிப்பெருமை யளித்தது. அவர்வழியே காமில், ஸான் ஸேய்ன், தெபுஸ்ஸி போன்ற அரிய புலவர் பலர் எழுந்து, ஃபிரெஞ்சுப் பாடல்களைப் பொழிந்தனர்; ஃபிரெஞ்சில் இசை நூல்களை முறைப்படுத்தினர். முதலில் ஃபிரெஞ்சுப் பல்கலைக்கழகம் அவர்கள் இயக்கத்தை ஒப்பவில்லை. பெருங்கிளர்ச்சி செய்து, அங்கும் இசைக்கொடி நாட்டினார்கள். காமில் ஒரு கேள்வி கேட்டார். "ஐயா, நமது தேசீய கீதமான" மார்ஸேய்யேஸ் "ஜெர்மன் பாஷையில் இருந்தால் இவ்வளவு ஆவேசத்தைத் தருமா? நாம் அறிந்த ஃபிரெஞ்சில் இருப்பதனாலேயே அது நம் உள்ளத்தைத் தொடுகிறது" என்றார் காமில். அறிவாளிகள் உணர்ந்தனர். ஃபிரெஞ்சுக் கழகத்தார் தாய்மொழியிசைக்கே ஒரு புலவர் கூட்டத்தை நாட்டி, ஏராளமான இசைநூல்களை வெளியிட்டு அவற்றைப் பாடி நாடெங்கும் பரப்ப இசைவாணரையும், கிராமஃபோன் கம்பெனிகளையும், ரேடியோக்களையும் தூண்டினர். பத்தாண்டுகளில் ஃபிரெஞ்சிசை வீடுதோறும் முழங்கியது.

## கங. ரஷ்யா

ரஷ்யாவில் ஃஜார் ஆட்சியில் நீண்டகாலம் ஃபிரெஞ்சு இலத்தீன் பாடல்களே பரவி யிருந்தன. தன் குடிகள் நல்ல கல்வி கற்கக்கூட அவன் சம்மதிக்கவில்லை. தாய்மொழி இசையால் மக்களுக்கு வரும் நலங்களை அவன் எப்படி யறிவான்? அதை அறிவிக்க அறிஞனொருவன் எழுந்தான். அவனே அலெக்சாந்தர் ஸ்க்ரியாபின் (1872—1915). "ஸ்க்ரியாபின்" என்றால் ரஷ்

யர், " அவன் வாழ்க!" என்பார்கள். அவன் ஷெல்லி யைப்போன்ற கவி, பெதோவன்போன்ற இசை வாணன். இளமையில் தாயையிழந்து, தந்தையின் அன்புமின்றி, பாட்டியிடம் தனியாக வளர்ந்தான். அவன் அடிக்கடி தாயை நினைக்கும்போது, தாய் மொழியையும் நினைப்பதுண்டு. தாயின் அன்பைப் போல் தாய்மொழியிசையும் மாசற்ற பயனளிப்ப தென்று அவன் உணர்ந்தான் இசைக் கழகத்திற் சேர்ந்து கலைத்தேர்ச்சி பெறும்போதே அவன் தன் ஆசிரியருக்கு ரஷ்ய கீதங்கள் பாடிக் காட்டினான்; மாணவர்களிடையே தாய்மொழி யன்பை விதைத் தான். அவனைச் சுற்றி இரசிகர் சிலர்கூடினர். எதிர்ப் புகளும் வழக்கப்படி இருந்தன. "நீ யென்ன பெதோவனோ?" என்று கேட்பவருக்குக் குறை வில்லை; " ஐயா, நான் பெதோவனில்லை ; ஒருவர் மற் றொருவராக முடியாது. ஆனால் நான் ரஷ்யன் ; உன் உடன் பிறந்தான் ; நமது தாய்மொழியில் பாடு கிறேன். காதிருப்பவர், தாயன்பிருப்பவர் கேட்கட் டும்!" என்றான். ஸ்க்ரியாபின் 1905-ஆம் ஆண்டு மாதாம் பிளாவட்ஸ்கியைச் சந்தித்து,அந்த அம்மையா ரின் குப்த உபதேசம் (Secret Doctrine) என்னும் நூலைப்படித்து ஆன்மிக உணர்ச்சி பெற்றான்; தியாசபி (Theosophy) உறுப்பினனாகித் தன் பாடல்களை அதன் பிரசாரத்திற்கே அர்ப்பணஞ் செய்தான். பிளா வட்ஸ்கி மூலம் அவன் இந்தியாவைப் பற்றியும் இந்திய சங்கீதத்தைப் பற்றியும் அறிந்தான். தியானமெல்லாம் இசைக்கலைதான். அவன் பல நாடுகள் சென்று தனது ரஷ்யகானத்தைப் பொழிந்து மாந்தர் மனத்தைக் கவர்ந்தான். அவன் இசையில் எப்படியோ இந்தியா

வின் கலைச்சுவை புகுந்தது. இந்தியாவின் ஆன்ம உயர்ச்சியும், ஐரோப்பாவின் உணர்ச்சிப் பெருக்கும் அவன் சங்கீதத்தில் இணைந்தன. ஸ்க்ரியாபின் பியானோவுடன் பாடக்கேட்ட ரஷ்யர், "அடே, நமது தாய்மொழிப்பாடல் இவ்வளவு நன்றாயிருக்கிறதா?" என்று வியந்தனர். இன்று ரஷ்யர் பாடும் பாட்டு, ரஷ்யகீதங்களே. ஸோவியத் ரஷ்யாவில் சுதேச கீதங்கள் வெள்ளமாகப் பெருகி வளர்ந்திருக்கின்றன. ரஷ்ய சங்கீர்த்தனத்தில் பெருமைகொண்ட புதிய ரஷ்யாவே இன்று நின்று நிலவுகிறது. ஸ்க்ரியாபின் ஒருநாள் இந்தியாவிற்கு வந்து கலைக்கோயில் கட்டி கிழக்கையும் மேற்கையும் தனது இசைத்திறமையால் இணைக்கக் கனவுகண்டான். ஆனால், அவன் வாழ்வே கனவாக முடிந்துவிட்டது. 1915-ஆம் ஆண்டு அவன் இறந்தான். ஆனால், அவன் பெயர் ஒவ்வொரு ரஷ்யன் உள்ளத்திலும் துடிக்கிறது.

ஐரோப்பிய சமுதாயம் மூச்சைப்போல இசையைக் கருதி வளர்க்கிறது. ஒவ்வோர் ஊரிலும் பெரிய இசைமாளிகையுண்டு. பாரிஸ், பெர்லின், இலண்டன் இசைமாளிகைகள் இந்திரலோகம்போ லிருக்கும். இசைக்கருவிகள், நூல்கள், புகழ்பெற்ற இசைவாணர் சிலைகள் முதலிய எல்லாம் அங்கே காணலாம். ஏராளமான பேர் வசதியாயமர்ந்து இசை கேட்கலாம்.

## கசு. இசைவளர்க்க வழி

என்னருமைத் தமிழர்களே, இப்படி உலகெங்கும் தாய்மொழி இசைக்காக ஒவ்வொரு நாட்டிலும்

அரிய பெரிய கலைவாணர்கள் பாடுபட்டிருக்கிறார்கள். இன்று எந்த நாட்டிற்குச் சென்றாலும் அதன் தாய்மொழியே தலைதூக்கி இசையரங்கில் தனிச் செங்கோல் பிடித்து நிற்கிறது. நாம் பிறமொழிகளை வெறுக்கவில்லை; பிற பெரியார் பாடல்களை அவமதிக்கவுமில்லை. பெதோவனையும் தியாகராஜரையும் நாம் மதிக்கிறோம். 1927-ஆம் ஆண்டு மைசூர் அரசர் பெதோவனுக்காகத் திருவிழா நடத்தினார். ஆயிரம் குரல்கள் அவனுடைய அற்புதப் பண்களை இசைத்தன. இராணுவ அதிகாரிகளும், வெண்ணாட்டாரும், இந்தியரும் இத்திருவிழாவிற் பங்குகொண்டனர். அதனால், மைசூர் மன்னர் ஜெர்மனிலேயே பாடினால்தான் கச்சேரிக்குச் சரிவரும் என்று சொல்லவில்லை. அவர் தமது கன்னடபாஷை வளர்ச்சியிலேதான் கருத்தூன்றினார்; கன்னட சாகித்தியத்திற்கும் நாடகத்திற்குமே முதன்மை யளித்தார். இன்று நவரசங்களுடன் கன்னட கீதங்களும் நாடகங்களும் மைசூர் தென்கன்னடச் சீமைகளில் பரவி விளங்குகின்றன. அந்த வேலையைத்தான் நாம் செய்யவேண்டும். மீண்டும் ஒருமுறை சொல்லுகிறேன் :

1. நமக்குப் பிறமொழியிடமோ, நாட்டாரிடமோ வெறுப்பில்லை. நமது தாய்மொழியை நமது மண்ணில் நாட்டி, வளர்த்து, அதன் மலர் மணத்தையும் கனிவளத்தையும் நுகரவே வேண்டுகிறோம். ஒரு தாய் தன் சொந்தப் பிள்ளையை வளர்ப்பது குற்றமா? பிறவீடுகளிலிருந்து வந்த பிள்ளைகளை வெறுக்காமல் சொந்தப் பிள்ளையை ஒரு தாய் பேணுவது இயல்புதானே? இதற்குச் சண்டை எதற்கு?

2. நாம் நமது தாய்மொழியை அதற்குரிய பெரிய நிலையில் வைத்து, உலகம் மதிக்கும்படி செய்ய முயலுகிறோம். தனது தாயின் பெருமையில் பொறாமைகொள்ளும் மகன் இருக்க முடியாது.

3. கலையுலகில் ஏழாயிரம் ஆண்டுகளாகச் சிறந்து விளங்கிய நமது தமிழ், உலகமொழிகளிடையே ஒப்பற்று விளங்கவேண்டிய ஆக்கந் தேடுகிறோம். மற்றெந்த மொழியினும், தமிழுக்குக் கலையுலகை ஆளும் உரிமை யுண்டென்பதைச் செயலிற் காட்ட முன்வருகிறோம். தமிழுணர்ச்சிபெற்ற எத்தமிழனும் இதைத் தடுக்க முடியாது.

தமிழிசை வளர்ச்சிக்காக இப்போது செட்டி நாட்டரசர் செய்துவரும் முயற்சிகள் எல்லாரும் போற்றத்தக்கவை. அண்ணாமலைக் கழகமே இன்று தமிழுக்குத் தாயகமும் தாரகமுமாகும். அங்கே நல்ல புலவர்கள் கூடித் தமிழுணர்ச்சியுடன் மொழிக்கும் இசைக்கும் அரும் பெரும் பணிகளைச் செய்கிறார்கள். தமிழர் அனைவரும் அப்பணிகளுக்குத் துணை நிற்க வேண்டும். எந்த இயக்கத்திற்கும் இக்காலம் பலமான பிரசாரம் வேண்டும்; விளம்பரங்கள் வேண்டும். அண்ணாமலைக் கழகத்திலிருந்து பட்டம்பெற்ற இசைவாணர், ஊர் ஊராகச் சென்று தமிழிசைபாடி, இசை, தமிழ், சன்மார்க்கம் ஆகிய மூன்றிற்கும் தொண்டு செய்யலாம். இனிய பாடல்களை இசைத் தட்டெடுத்து வீடுதோறும் தமிழிசை முழங்கச் செய்யலாம். சாப்பாட்டுக் கடன் முடிந்ததும், நம்மவர் ஒரு நண்பர் வீட்டிற்கூடி, பயனுள்ள இசைத் தட்டுகளைக் கேட்கலாம்.

4. வானொலி நிலயங்களில் தமிழிசை முழங்க வேண்டும்.

5. நம் திருக்கோயில்களிலும் திருமடங்களிலும் தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, திருப்புகழ் முதலிய அருட்பாடல்களும், இன்றைய அருளாளர் இயற்றிய பாடல்களும் நல்லிசையுடன் கட்டளையாகத் தினப்படி முழங்கவேண்டும்.

6. நம் ஊர்வலங்களில் தமிழிசைக் கூட்டம் இடம்பெறவேண்டும்: நம் சடங்குகளில் அததற்கேற்ற தமிழ்ப் பாடல்கள் முழங்கவேண்டும். நாட்டுப் பாட்டுடன் வீட்டுப்பாட்டும் சிறப்புறவேண்டும்.

முடிவாக ஒவ்வொரு தமிழன் உள்ளமும் தமிழுணர்ச்சியிலும் தமிழிசை யின்பத்திலும் தோய்ந்து, தமிழ் மயமாகவேண்டும். தமிழிசை, கடல்கடந் தொலித்துக் காசினி யெங்கும் புகழ் பெறவேண்டும்.

தமிழ்நாட்டுக் கல்விமுறை தமிழர் கையில்,
தாய்நாட்டுத் தொழில்களெலாந் தனயர் கையில்,
தமிழர்வா ணிகமெல்லாந் தமிழர் கையில்,
தமிழ்த்துறையில் இயங்குவதும் தமிழர் கப்பல்,
தமிழ்க்காற்றி லிசைப்பதுவுந் தமிழர் பாட்டே!
தமிழ்நாடு தமிழர்க்கே; தமிழர் சேமம்
தமிழர்களின் ஒற்றுமையே; தமிழர் உள்ளம்
தமிழுள்ளம் எனின் வாழ்வு தழைப்ப தாமே!

இதுதான் தமிழர் முன்னேறும் வழி. தமிழிசை முழங்குக! எந்தாய் வாழ்க!

---

